நாரணனேயுனதுபதங்களினம்போற்றி ... *
பொன்ருதபிரமனுக்குந்தந்தையாகும்... ... *
புனிதனேபுயங்கவணைதுயின்ருேய்போற்றி.... *
யென்ருதையன்னேயுடன்சுற்றமாகு... ... *
மெழிலானசிதரனேயிறைவாபோற்றி...... (௰௧)
கல்லாதகயவருறுகூட்டந்தன்னிற்... ... *
கலந்திருந்தவெனேயழைத்தகரமேபோற்றி... ... *
செல்லாதமாயையிருண்மயக்கமெல்லாஞ்........ *
சிரணிக்கத்திறந்தந்ததிண்டோள்போற்றி ... *
வெல்லாதபகையுறவுவெல்வதற்கு... ... *
விழிக்கருணேதந்தவொருவிமலாபோற்றி... .. *
மல்லாருமரவமெனுங்கொடியோன்றன்னே ... *
மாயாதுமாய்த்தவொருவள்ளல்போற்றி... ...(௨௰)

---

இடையிடையிற்றனிச்சொற்பெற்ற
விரண்டடிக்குறட்டாழிசை.

செல்வச்செருக்கிற்... ... ... *
திரமாவழுந்தினேன்... .. ராமராம விது
தீர்வதுமில்லேத்... .. ... *
திருவருளன்றியே... ... ராமராம
பல்வழிசெல்லிற்... ... .. *
படர்மதமேறுதே... ... ராமராம-வின்
பார்வையதன்றிப்... ... ... *
பகர்மதந்தீராதே



உற்பத்திராச... ...... ... *
வுததியழுந்தினேன்... .. ராமராம-விதற்
குன்னருளன்றி... ... ... *
யொருவங்காணேனே ... ... ராமராம
வற்பத்திலாசை... ... ... *
யனுதினங்கொண்டேனே...... ராமராம-விந்த
வாசைப்பிசாசுன்... ... *
னருளன்றிநீங்காதே...... ராமராம (௨௨)
அன்னேயுதாத்... ... ... *
தவஸ்தைகள்பட்டேனே... ... ராமராம-வினி
யாற்றேனேநீயவை... .. ... *
யற்றுவிடவேணும்... ... ராமராம
பின்னவபின்னப்... ... ... *
பிணக்கதற்காளானேன்... .. ராமராம-விந்தப்
பின்னமுனதரு... ... ... *
ளன்றிப்பிரியாதே... ... ராமராம (௨௩)
நீங்காக்கருவி... ... ... *
நிபங்களொழிந்தவே... ... ராமராம-வுன்
னித்தியமான... ... ... *
நிலேயதடைந்ததால்... ... ... ராமராம
வோங்காரமென்னு... ... ... *
மலகையகன்றுதே... ... ராமராம-வின்
னுதாரமான... ... *

உண்டேயுறங்குவ... ... ... *
திண்மையாநம்பினேன்... ... ராமராம-நின்
னுண்மையறிய.... ... ... *
வொழிந்தவைநீங்கின... ... ராமராம
பண்டேயிருந்த... ... ... *
பயங்களொழிந்தன.... ... ராமராம-நின்
பாதமலரிற்......... .. ... *
பணிந்ததிடத்தினால்... ... ராமராம (உ௫)

விஷ்ணுவணக்க முற்றிற்று.

# சொரூபவணக்கம்.

(அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.)

இந்தவுலகசராசரங்களியாவனிடமாத்தோன்றியிடு... *
மிந்தவுலகசராசரங்களியாவனிடமாவிளங்கியிடு... *
மிந்தவுலகசராசரங்களியாவனிடமாவடங்கியிடு... *
மந்தமூலமுதற்பொருளை யகத்தெந்நாளும்வணங்கிடுவாம்.

எண்ணற்கரியசித்திரமோ... ... ... *
ரேகபடத்திலிருப்பதுபோற்... ... *
பண்ணற்கரியசிவேச... ...... *
வுலகமிருக்கும்பரவிசும்பே... .. *
மண்ணைப்புனலையனல்காலை........ *
வானைத்தருசங்கற்பசத்தி... .. *
நண்ணிப்பொருந்துமூன்றவத்தை.... ... *
பகர்மதந்திராதே... ...



சுட்டுமறிவுகெட்டசுக......... ... ... *
சமணுந்துரியநிலைமேவி...... ... *
யிட்டத்திருந்ததன்மயத்தோ ... ... *
ரிதயாம்பரத்திலிலங்கொளியே ... *
யெட்டுத்திசையோடண்டமெலா...... .. *
மெங்குநிறைந்தேதெல்லாமாய்த்... ... *
துட்டக்கருத்திற்றூரமதாய்த்... ... ... *
தூயோர்க்கணித்தாந்தொல்பொருளே.... (௫)

இங்கேசரிக்குமெறும்பாதி... ... ...... *
யெண்ணம்பகத்தோனிதயத் ... *
தங்கங்கிருக்குந்தற்சாட்சி... .. ... *
யானவகண்டபூரணமே... ... *
கங்கையிழுக்கும்வெறும்பிணம்போற்... ... *
கனகமனைவிகான்முளையோ... ... *
டிங்கேகுடும்பச்சுமையிழுப்போ.... ... *
ரிதயத்தெட்டாவிரும்பொருளே... ... (௬)

எல்லாமிறந்தநிலையாகி... ... ... *
யாறுயென துகற்பிதமா... ... *
மெல்லாமாகியல்லவுமா... ... ... *
யிருந்துவிளங்குமின்னமுதே.. ... *
பொல்லேனவிவேகத்தாலே... ... ... *
புன்மைவிடயமாக்களாந்தே... ... *
யல்லற்படுவதுனக்கழகோ... ... ... *

சித்தத்திருக்குஞ்சிதாகாச... ... ... *
தேவேதேவதேவதையே... ... ... *
பத்துத்திசையும்பதினுலு... ... ... *
லோகமெங்கும்படரொளியே ... ... *
முத்திக்கரசேயாருறின்......... ... *
மூலப்பொருளேமோனசுகம்.... ... *
புத்திக்கேதந்தவிர்த்தடிமை... ... *
பொருந்தவருள்வாய்புண்ணியனே... ... (௬)

சொரூபவணக்க முற்றிற்று.

---

# அருளிறைவணக்கம்.

(அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.)

சகந்தனிலேபிறந்திறந்துவீணுகநாட்கழித்துத்... ... *
தவித்தவென்ற......... ... ... *
னகந்தனிலேயிருக்கின்றபரவடிவையானறிய... *
வன்புவைத்துச்... ... ... *
சுகந்தனிலேமேலானசுகம்பரமசுகமென்றே... *
தோன்றக்காட்டு... ... *
முகந்தகுருதேசிகனையனுதினமுமிருதயத்தி... ... *
லுட்கொள்வேனே... *
[illegible]... (க)



(வேறு.)

பொறியாருலுங்காண்பரிய... .... .. *
பொருளோயுனதுபதம்போற்றி... ... *
யறியாநின்றுமறிந்திலனு... ... ... *
யானுயுனதுபதம்போற்றி... ... *
பிறியாப்பிறியத்தப்பாலாம்... .... ... *
பெரியோயுனதுபதம்போற்றி... ... *
சிறியேனறிவுக்கறிவான... ... .. *
சித்தாமுகந்தகுருபோற்றி.... .. (உ)

(வேறு.)

பத்தியுடையவமரர்பெறும்... .. ... *
பைம்பொன்னுட்டினிதான... ..... *
சித்திவிளங்குங்காவிரிசூழ் ......... ... *
செல்வப்பொருள்வைமாநகரோன் ...... *
புத்தியிலனுமெனதுபவம... ... ... *
பொருளதாகக்கொண்டினிய... ... *
வத்துவிதத்தையளித்தவுகந்...... ... *
தானைவணங்கித்துதித்திடுவோம். ....... (௩)

கடலேஞானவேதாந்தக்... ... *
கரும்பேயெனக்கோரருந்துணையே... *
யிடரோயருகுமாறெனக்கோ... ... ... *
ரிச்சையேதுன்கழலல்லா ... ... *
லுடலேபொருளேயாவியெனு... ... ... *
முகந்தாய்மென்றுமெனக்கென்று ... *

படரும்வினையையகற்றியருள்... ... *
பரிபூரணனுவுன்பதம்போற்றி.... ... (ச)

எழுசீர் ஷ விருத்தம்.

முத்துவெண்ணகையார்சித்தமதொக்க... .. *
முயல்வதேகருமமென்றுன்னிப் ... ... *
பித்தரின்மயங்கிப்பிறவியங்கடலிற்... ... *
பிழையுற்றழுந்துறுவேனைச் ... ... *
சித்தமதொக்கவாவெனவழைத்துத்............ *
திகழுரீபிரமமென்றருளு... ... *
முத்தமகுருவேபொருள்வைமாநகர்வா... ... *
மூகந்ததேசிகசிகாமணியே... ... (ரு)

பிள்ளைகளுறுபிழைகள்செய்தாலும் ......... *
பெற்றவர்தனையனாமுனிந்து... ... *
தள்ளுதலுலகிலுண்டுகொலடியேன்... ...... *
றவறினைப்பொறுத்தருள்புரிவா .... *
யெள்ளுமிடமும்பிரிவிலாப்பொருளே.... ... *
யெந்தையேயென்னுயிர்த்துணையே... *
யுள்ளுதற்கரியபொருள்வைமாநகர்வா... ... *
மூகந்ததேசிகசிகாமணியே... ... (சு)

ஏமநற்கிரியைவலஞ்செயுங்கதிரோ ... ... *
னெழுவதன்முன்னமேயெழுந்து .... *



காமனையெரித்துக்காலனையுதைத்துக்... ... *
கஞ்சனற்சிரநகத்தரிந்த... .... *
வோமெனும்பொருளேபொருள்வைமாநகர்வா ... *
மூகந்ததேசிகசிகாமணியே.... ... (எ)

அறுசீர் ஷ விருத்தம்.

உகந்தானெனும்பேரின்பவுரு.. ... ... *
வோராகமதாயெழுந்தருளிச்... ... *
சகந்தானறியவெனையாண்ட... ... ... *
தாயேவீரபத்திரப்பே... ... .... *
ருகந்தேதரித்துமோருருவ... ... ... *
மொருநாமங்களொன்றுமிலா.. ... *
தகந்தான்புறந்தான்கீழ்மேலென் .. .. *
றறிதிக்கடங்காவம்பரமே... ... (அ)

ஒன்றும்வேண்டாவுலகாள... ... ... *
வுண்மைமகுடந்தரித்தடியார்க் ... *
கென்றுந்தம்மைமறைத்தவிரு... ... ... *
ளிரியவிளங்குந்திவாகரனே... ... *
நன்றுதீதோடியானெனது.. .. ... *
நாடுநாமவுருவனைத்துஞ்... ... *
சென்றேயலையாதிகள்போலச் ... ... *
சேருஞ்சிவமாஞ்சாகரமே... .. (கு)

மாண்டவிந்தச்சூக்கவணு... ..... ... *
மகத்திவ்வணுவுக்கணுவுருவே... ... *
வேண்டிப்படியிற்றெழுந்தெய்வம் ... .. *
விள்ளற்கரியபேதமிவை... ... ... *
காண்டற்குரியதெய்வமதைக் ... ... *
காட்டுந்தேவதேவதையே.. ... ... (௰)

செய்வான்செய்விப்பவன்செய்கை... ... *
செய்யுங்கருவிதொழிலைந்து ... ... *
மெய்யாய்விளங்கும்பரமாக... ... *
மெய்யாவுணாத்தமெய்யுருவே... ... *
யெய்யாவெவைக்குமகத்தாக... ... *
விருந்தசுத்தந்தனையடக்கி ... ; ... *
யையாவகண்டபூரணமா.. ... *
யடங்காமகத்தோமகத்துருவே... .........(௰௧)

துச்சக்குகையாமைங்கோசத்... ... ... *
துன்பவுருவின்மறைந்திருந்த... ... *
புச்சப்பொருளீதெனக்காட்டும்... ... ... *
புராணனந்தப்பழம்பொருளே... ... *
யச்சப்பிறவிமரணமெனு... ...... *
மாழிகடக்கவேழைதனக்... ... *
கிச்சையின்றியருளுருவா... ... ..... *
யெழுந்தேயொளிருமரக்கலமே... ... (௰௨)

ஏகப்பொருண்முப்பதமாக்கி........ ... *
[illegible]



யேகத்தள்ளியொருமூன்றை... ... ... *
யேகமாக்குமென்மயமே ... ... *
மோகத்தழுத்துமேழ்பூமி... ... ... *
முற்றுங்கடந்துமோகமறு... ......... *
மியோகநிலமேழேறியதி... ... ... *
னுறுவாழ்வளிக்குங்கற்பகமே .... (௰௩)

தன்னைக்காணுவறிவாலே.. ... ... *
சகத்தைப்பேதமாக்கண்டே... ...... *
யென்னதிதியானிவனென்னு... .. ... *
மிடருற்றுழன்றேனெங்கோவே ... *
யன்னமயக்கமுன்னருளா... ...... .... *
லகன்றேசகமென்கற்பிதமா... ... *
மென்னையன்றிவேறன்றி..... .. ... *
யானுக்கண்டேனென்கண்ணே... ... (௰௪)

இந்தவுடலோடாவியொரு...... ... *
ளெல்லாமித்தையிவைவாங்கி.... .. *
யந்தமில்லாவுன்வடிவை... ...... *
யடியேற்கருளுந்தாதாவே...... ... *
கந்தவிடயமாதியைந்துங்... .... *
கைக்கொண்டருந்திநீயிருக்க... .. *
வெந்தமதியாலியான்புசித்தே... ... .... *
னென்னலாகுமிறையோனே... ... (௰௫)

ஆகாசாதிதேகாந்த...... ... *

லேகவறிவாமுன்வடிவே... ... *
யிவைக்கும்வடிவமென்றுயே... .. *
மோகமறமுன்சொன்னவைகண்... ... *
முழுதுநீயாய்த்தோன்றிவிடி ... ... *
னேகுநீானிீதெனலு... ... .. *
மெங்கேபோததேவதையே ... ... (யசா)

தன்னையுணருமுணர்வின்றித்... ... ... *
தானும்பொய்யாங்கோசமைந்தும் ...
பின்னமின்றியிருந்தபடி... .. ... *
பின்னுமளிக்கும்பேரருளே... ... *
பொன்னங்கிரியுமணுவுருவும்... ... ... *
பொருக்காட்சியிலேசமிலையா... ... *
மென்னையென்னுலெனக்களித்தா ... ... *
யெந்தாயென்றனுயிர்க்குயிரே... ... (யஎ)

ஆராவருந்தல்பொருந்தவிரண்... ... *
டருமைபெருமையெனப்புசிக்கு... ... *
மோராவெனக்கிவ்விரண்டோடு... ... ... *
முடம்புஞ்சுமையென்றுனாத்தவனே ... *
யாராவிந்தப்பாரமெனக்... ... ... *
காமோநானுன்கற்பிதமீ... ...... *



கடம்போலிருக்குமுடம்போடு ... ... *
கரணங்காணுங்கரியானே ... ... *
னடங்காவகண்டசிவமானே ... ... *
னந்தோவெல்லாமானேனே ... *
யடங்காமமதையகங்கார ... ... *
மகந்தையிருக்குமாலயமாங் ... ... *
கொடும்பாவிகடந்நெறியடியார் ... ... *
கூடாதகற்றுங்குருமணியே. ... (யக)

எல்லாமாகியல்லவுமா ......... ... *
யிருந்துவிளங்குமெம்மிறையே ... *
பொல்லேன்றனுவாஞ்சுமைசுமந்து .. *
பொறுப்பதரிதுமிகவரிது ... ... *
கல்லாமனிதர்சம்பந்தம் .... ... *
கடந்தேயுன்னையடைவதென்றே ...... *
நல்லோரன்றியுயிர்க்குறுதி ......... ... *
நாடிலிலையென்றின்றறிந்தேன். ... (உய)

பஞ்சகோசங்கடந்துசிவ .. ... ... *
பாரமேறியனுதினமுந் ... ... *
துஞ்சலில்லாப்பரமசுகந் ... ... *
தோய்ந்தேயிருக்கும்வாணுளை ... ... *
யெஞ்சலில்லாப்பெரியோர்க ...... ... *
ளென்றுமடைந்தாரவரன்றி ... ... *
நஞ்சையமுதாவருந்தியிடு

## எண்சீர் ஷ விருத்தம்.

துஷ்டர்களைநிக்கிரகம்பண்ணவேண்டித் ... *
தூயோர்கட்கனுக்கிரகஞ்செய்யவேண்டி ... *
யிஷ்டமுடனேதசாவதாரமாக ........ *
வெடுத்ததுமுன்னிந்நாளிலடியேன்றன்னைச் .. *
சிஷ்டனெனும்படியாக்கநினைத்தபோதே ... *
செலமாலங்கட்டியதாய்த்திரண்டதேபோ ... *
லிஷ்டமுடன்பதினொன்றுமவதாரத்தை ... *
யெடுத்துமெனையாண்டவாறென்னேயென்னே. (உஉ)

உண்டானகருவியெனுமாறுறுக்கு .. *
முன்னறிதாமதுநீயென்றுரைத்தோன்றன்னை... *
விண்டாலுமவன்கருணைவிளம்பவொண்ணு ... *
விண்டுவெனுமருளுருவாவிளங்கிவந்து ... *
கொண்டானேகுரமபைமுதன்மூன்றையுந்தாங் ... *
குவலயத்திலெனதுதொழிலொன்றுங்காணேன் *
பண்டானபழவினைகளெல்லாஞ்சென்றே ... *
பரமபதமெனக்குவரும்படியாயிற்றே. ... (உங)

அற்பமாமதுவருந்துமவனேகுற்ற ...... *
மகுற்றமெனவறியாதுபிதற்றினக்காற் ... *
பொற்புமிகுமுனதுபத்திரசம்புசிக்கும் ... *
புன்மையனுக்கெதுநன்மைதீமையாகு .... *
மற்புயனேயவ்வெறியிற்பிதற்றும்பாடல் ... *
வகையேதுதொகையேதுவழியேதாகுன் *



சொற்பிழைகள்வந்தாலும்பொறுப்பதன்றன் ... *
சுதந்தரமேசுதன்வசனந்தந்தைபோல. (உச)

இப்பாரிலுடலெடுத்தேயிந்நாண்மட்டு ..... *
மிவ்வுடலேசத்தியமாவெண்ணிநைந்தே ... *
பொய்ப்பாலனெஞ்சமெனும்வன்பேயோடும் .. *
புகலிடமொன்றில்லாமற்புலம்புநாளிற் ... *
கைப்பாலன்றனக்கன்னைகருணைபோலக் ... *
கடாட்சிப்பாயெனத்துணிந்துகருதிப்பின்னு *
மொப்பாருமில்லாதவுன்னைக்கிட்டி ... *
யுடலாதிபந்தமெலாமொழியவந்தேன். ... (உரு)

அன்னையுதரத்திடையேயழுந்துந்துன்ப .. *
மதுநீங்கிப்பிறக்கும்போதழுத்துந்துன்பம் ... *
பின்னுமுடற்பிணியதனால்வருநதுந்துன்பம் ... *
பேதமதியதனாலேபிறக்குந்துன்ப ...... *
மின்னவுடலிறக்கும்போதழுந்துந்துன்ப ... *
மித்தனையுநீங்கவெனக்கென்றோவென்றோ *
வென்னையுமோர்ஞானவடிவாக்குவித்த ... *
விறைவனடிநீடூழிவாழ்கவென்றே. ... (உசா)

## எழுசீர் ஷ விருத்தம்.

ஆகந்தானுவழுந்தவெனை ... ... *
யழுத்தவுரித்தாமடமையினுற் .. ... *
பாகன்கரத்திலகப்பட்டுப் ... ... *
பதைத்தவிபம்போற்பதைப்பேனை *

மோகந்தீர்ந்தவுகந்தானு ... ... ... *
முதிர்ந்தகருணையாலழைத்து ... ... *
வேகவறிவுன்னுருவென்றே ... ... *
யிசைத்தானவனைவணங்கிடுவாம். ... (உஎ)

எழுசீராசிரியவிருத்தம்.

தடமுயர்கடல்சூழ்பொருள்வைநன்னகரந் ... *
தனின்மனுத்தேகமாய்விளங்கித் ... *
திடமுடன்சுருதிசாஸ்த்ரவேதாந்தஞ் ... ... *
சிந்தையிலனுபவந்தெளிந்து ... ... *
படிதனிற்றனைவந்தடுத்தவர்க்கிரங்கிப் ... *
பரமசற்குருவதாயுணர்த்தி... ... ... *
யடியவரடிகட்கேயுகந்தாட்சி ... ... *
யரன்பதிகயிலைவாழ்ந்தனனே. ... (உஅ)

பதினான்குசீர் ஷ விருத்தம்.

ஆகநற்கனகமேனிபெற்றுடைய ...... *
ராவிசுற்றுமொருபாவிக ... ... *
ளாலமொத்தவிழிமேருவொத்ததன ..... *
மாசையொத்தவிலைகூறுவார் ... *
மூகவிர்த்திகொடுமூடரத்நமெனு... .... *
மூடனானவனைவெல்லுவார் ......... ...*
மோகமற்றவுனைநினையுமன்பனாயு... ... *
மூழ்குமாறுசெயவல்லலோ *



வேகபோகசுகரூபஞானவுனை ... ... *
யானுநம்பினவனாதலா ... ... *
லின்னமங்கையர்கண்மையல்கொண்டுழல்வ .. *
தென்னபாவமிதுவென்னவோ... ... *
வேகமுற்றுவருகோபனேவுகணை ... ... *
வெட்டியட்டதொருவீரனே... ... *
வேதவாகமபுராணரூபமெனும் ... ... *
வீரபத்திரசுவாமியே. ... ... (உகூ)
மானமுற்றுவருதாரமக்கண்மனை .... ... *
மாடுநித்தமெனவெண்ணியே ... ...*
மாளுசித்தமுறைதீனமுற்றமட .... .... *
மாய்வதெப்பகலறிந்திலே... ... *
ஞானமற்றெனதுமற்றலோடறமு ... ...... *
நவிலுபாவமதுமற்றுமே... ... *
ஞானலுற்றறிவுமீனமுற்றவறி ... ... *
யாமையும்மறுவதெந்தநா... ... ... *
ஞானமுற்றவுடல்பற்றுதுக்கசுக ... ... *
மொருவியின்பமயமாகியே ... ...*
யுள்ளமென்னுமொருகவலையின்றியொளிர் ... *
யோகியேகொடியபாவியாம் ......... ...*
வேனின்மாரன்மிகவீசுபாணமதை ... ... *
வெட்டியட்டதொருவீரனே... .... *
வேதவாகமபுராணரூபமெனும் ... ...*
வீரபத்திரசுவாமியே (ஙய)

(நேரிசைவெண்பா.)

அஞ்சும்போயாறும்போயைம்பத்தோரக்கரம்போய் *
விஞ்சுவெறும்பாழாகிவிட்டேனே-நெஞ்சே ... *
யகந்தானிருக்குமகதிமிரம்போக்கு ... ... *
முகந்தானாவேறென் றுணர். ... ... *

அருளிறைவணக்க முற்றிற்று.

# ஆதியிற்பஞ்சாக்கரமருள் செய்த

## குருவணக்கம்.

அஞ்சக்கரந்தன்னையெஞ்சாதுசிந்திக்கு......... ...*
மவர்கட்கோரல்லலில்லை ... ... *
யயனும்படைக்கநினையான்மறலிகிட்டுகில... ...*
னடையவேண்டுவதுமில்லை ... ... *
விஞ்சத்தனம்பூமிமைந்தரொடுசுற்றமகல் .. ...*
வீடுதுணையென்னவேண்டார் ... ... *
வீணாவாறுறுமெண்ணர்கள்சொன்னாலும் ... *
மேலென்றுசித்தம்வையார்... ... *
மிஞ்சுற்றவிந்தவுபதேசந்தனைப்பெற்றோர் *
வெகுகாலம்வாழ்ந்திருப்பர் ... ... *
மெய்யனேதுய்யனேயையனேயப்பனே *
வேதாந்தமோனகுருவே ...



மஞ்சுபதிககனமெனநிறையுஞ்சிதாகாச ... ... *
வடிவமேயெமதுகுருவே ... .. *
வணிகர்குலவோஷதிகடழையவுபதேசமழை ... *
மாறாதுபொழியுமுகிலே. ... ... (௧)

நீங்காதவஞ்ஞானதிமிரங்கழன்றோட ... *
நிகழ்கின்றபஞ்சாக்கர ... ...... ...*
நிலையானகிரணந்தரித்துவந்துதவலா ... *
னின்மலக்கனலியெனலாம் ... ... *
தேங்காததெளிவுதருநால்வேதவாறங்க ... *
திரளுந்தெரிந்தவதனாற் ... ....*
சித்துருவசீதரன்னுயிர்கட்கிரங்கிவரு ... *
சின்மயவியாசனெனலாம் ... ... *
போங்காலம்வருகாலநிகழ்காலமூன்றையும் *
புந்தியிலுணர்ந்தவதனாற் .. ... *
பொற்புடையதற்பிரமசிற்சொருபவானந்த ... *
பொருவரியசுகமுனிவனும் .. ... *
வாங்காதவாங்காரதந்திக்கோரரியாகி ... *
வந்தருளுஞானகுருவே ..... ... *
வணிகர்குலவோஷதிகடழையவுபதேசமழை ... *
மாறாதுபொழியுமுகிலே. ........ (௨)

அண்டங்கடந்துநிறையீசனேபரதத்துவ ... ... *

லற்பபலசமையங்கணேதிசெய்தொருவனுள ... *
ளுமென்னும்லோககுருவாம் ... *
வண்டமிழ்தெரிந்துபலபாமாலையர்த்தங்கள் ... *
வல்லையினறிந்துகொளலான் ... ... *
மந்தமாருதமூலகிரியினிலுவந்தருளு ... ...... *
மாசில்குறுமுனிவனுகும் ... ... *
பண்டுவருகாயத்ரியல்லுபகனீங்காது ... *
பகர்தலாற்பனவர்பதியாம் ... *
பாழானமாயைதருமியானெனறவிர்ந்தசிவ ... *
பத்தியுளசித்துருவமே ... ... *
வண்டுமதுவுண்டுறையுமுண்டகத்தெரியல்புனை *
மாதவாபோதவுருவே ... ... ... *
வணிகர்குலவோஷதிகடழையவுபதேசமழை ... *
மாருதபொழியுமுகிலே. ... ~~~ (௫)

தாரார்களோர்கணந்தருகடிகைதள்ளார்கள் .. *
சந்ததமும்வந்தபிணியைச் ... ... ... *
சலியாதுவாங்கியனுபவியார்களென்றனுயிர் ...... *
தனுவிட்டகன்றபொழுது .... *
வாரார்கடுணையாகநீராளமாயுருகி ... ......... *
வந்திடுவர்போலவழுவர் ...... ... *
வந்தாலுமுடையற்றபிணமோடுகூடியே ... ... *
மயானவனாவந்ததாலோ ... ... *



தாராளமாகநானவர்களுறவென்பதுஞ் ... ... *
சதாகாலமென்னையவர்கள் ... ... *
சார்வாகவெண்ணினதுமிப்படிமுடிந்ததாற் ... *
சரணமுனையன்றியுளதோ ... ... *
வாராதும்வாராதுவருவதுவும்வந்ததெனு .. *
மதிதந்தளிப்பதென்றோ ... ... *
வணிகர்குலவோஷதிகடழையவுபதேசமழை ... *
மாருதபொழியுமுகிலே. ... ... (௪)

சுத்தலக்ஷியமானசத்தாகியேகமாய்ச் .... *
சொல்லரியசின்மயத்திற் ... ... *
றோன்றுநின்மலசத்திசகசிவபரமதாய்த் ... *
தோன்றுமதினுனுவிதப் ... ... *
பெத்தமுறுபாவனையிலிற்றைவனாவீணுய்ப் ... *
பிறந்திறந்தெய்த்துவிட்டேன் .... ... *
பெறலரியவுன்கருணைபெற்றுநானுவிதப் ... *
பிராந்தியதுதீர்வதென்றோ ... *
புத்தமேமுத்தமேசத்தியமேயானந்த ..... *
போதமேபொன்னுலகுநேர் ... ... *
புகழுந்திருப்புனவைவாசனேயடியர்துதி .... *
பொன்றுதபரமகுருவே ... ... *
மத்தனேனெனதுமதிநின்பாதவனசத்தில் ... .. *
வைத்திடுவதெந்தநாளோ ... ... *
வணிகர்குலவோஷதிகடழையவுபதேசமழை ... ... *

ஓயாதவேழ்கடலுமீராறுசூரியரு
    மொருசண்டவாய்வுமொருகா
லுலகத்தில்வந்துறினுமணுவுங்கலங்காத...
    வுறுதியுளமேருவெனலா
மாயாதுவளர்கின்றசிட்டாணிரந்தர...
    மதிக்கரியகெம்பீரமா...
மனதுற்றுநிற்றலாலெப்போதுநிறைகின்ற...
    வாரியெனலாகுமாதோ..
காயாதசீதமுடன்வெம்மையதிரண்டையுங்...
    கணியாதிருந்தவதனுற்....
கனவடிவுபெற்றுள்ளமுண்டகக்கண்ணனிரு...
    கனமானபாரியெனலா...
மாயாதசெல்வமதையென்றனக்கருள்புரிய...
    வந்தருளுமோனகுருவே
வணிகர்குலவோஷதிகடழையவுபதேசமழை
    மாருதுபொழியுமுகிலே. (சு)

அல்லலானதுவிலாக்குபேரன்றனத்திலு
    மதிகநிதிநீங்குபொழுது
மாகாதபொய்யுரைகள்சொல்லாதிருத்தலா...
    லயோத்திநகரதிபனெனலாங்...
தொல்லைவினைரூபமாய்வருபஞ்சகோசநகர்.........
    அளாய்த்தகர்த்தவதனுற்..
சொல்லரியஞானமதயானையென்றியாவருந்....



நல்லசிசுபொல்லாதசேயென்றுதாயுமிரு
    நாட்டந்தவிர்ந்தருள்வபோ
னுடுமுலகுயிரைநீசமமாயளித்தலா...
    னன்மையுறுமன்னையெனலாம்...
வல்லையெனதுடலாவிநிதிநானளித்திலேன்...
    வலியவேற்றுண்டகுருவே...
வணிகர்குலவோஷதிகடழையவுபதேசமழை...
    மாருதுபொழியுமுகிலே. (எ)

ஆசைப்பெரும்புணரிகாமக்களஞ்சிய...
    மாங்காரபீடநீங்கா...
வஞ்ஞானவாலயம்பொய்யினுக்கோர்புற்...
    றகந்தைக்கோர்சூழலாகுங்...
காசுற்றகோபாக்கினிக்கினியகாட்டமாங்...
    கடுலோபன்வாழுமனையாங்...
கருதின்மிகுமிழிவுடையமற்சரன்முதற்பெயர்கள்...
    காதலோடுறையுநகராம்...
பேசுற்றவிவ்வகைக்கிடமாயிருந்துநான்...
    பெற்றபேறின்னம்வேண்டாம்...
பேசரியமுத்திக்குவித்தாகுமுன்கருணை...
    பெற்றுப்பிழைப்பதென்றே...
வாசமுறுமுண்டகத்துறைபவன்பொல்லாத...
    மறலியிடம்விட்டிடாதே...
வணிகர்குலவோஷதிகடழையவுபதேசமழை... (அ)
    மாருதுபொழியுமுகிலே...

சின்மயவிலாசராம் பரமபதிநாதரைச் ... *
சிந்தித்திருக்குமுறையாற்... ... *
சித்தமுதலாதிந்தியங்களுமடக்கலாற்... ... *
றிருவாதவூரரெனலாம்... ... ...*
பொன்மயமதானவுருமின்னார்கள்சாலமது... ... *
பொன்றத்தொலைத்தவதனாற்... ... *
புகழுடையகங்கையின்சுதனாகுமனுசமும்... ...*
புகழவருசேனாபதி... ... ... *
யென்பெயர்தரித்தலானிருண்மலமறுத்தலா... ... *
விருஞானதியசுர... ... ... *
ரெட்டுணையுமிச்சமறவெட்டுமொருவேலுடைய... *
வெழிலானகந்தனெனலாம்.. ... *
வன்பணிகள்புரிபவர்களாறுமுள்ளதால்... ...... *
வருமுருகனாகுமையா... ... ... *
வணிகர்குலவோஷதிகடமையவுபதேசமழை... ...*
மாறுதபொழியுமுகிலே... ... (௯)
பந்தமுறுதொந்தவினைசிந்தனையிலெண்ணாத ... *
பரமபதமானகதியைப்... ... *
பகர்கின்றவுயிர்கணிதமடையவருள்புரிதலாற்... ... *
பார்வதிசமேதரெனலா... ... *
மிந்தவுயிர்மிடியகலவந்தகுருசுவாமியுன்... ... *
னிருபாதநிதியருளலா... ... ... *
மிருவானவரசுபுகழ்வரமானபதமுதவு... ... *
மெழிலாரணத்தனெனலாங் ... ... *



தந்தவினைவழிநின்றுதுன்பமுறுமெம்மனோர் ... *
சனியாதவமுதமயிலச்... ... *
சந்ததமுவந்துதவுகின்றதாலீங்கிரண... ... *
சந்திரனெனப்புகலலாம்... ... *
வந்துபிறவாதவகையடியனுக்கருள்புரியும்... ... *
வள்ளலேபரமகுருவே... ... *
வணிகர்குலவோஷதிகடமையவுபதேசமழை ...... *
மாறுதபொழியுமுகிலே... ... *

## முத்திநிச்சயம்.

(நேரிசைவெண்பா.)

அறிவானதிபொருளோடாமுணர்வும்பொன்றிக் ... *
குறியாவையுமறந்துகுன்றிற் - பிறியாது... *
நித்தம்பரசுகமாய் நிற்பதுவேமுத்தியதற் 
கர்த்தமிதுசொன்னேனறி. ... ... (௧)
நித்திரையுஞ்சாக்கிரமு நீண்மறப்பெண்ணத்தாலா ... *
மத்தனையுந்தோன்றாதகத்தடக்கிச் - சித்திரம்போ ... *
லென்றிருப்பதன்றுமுத்தி யெய்துமிதுவேசுகமா ... (௨)
நன்றிதுவேயர்த்தமெனநாடு. ... ...
காண்பானுங் காண்பவையைக்காணுமிடத்தேகமதாய்ப்...*
புண்பனவால்வாதனையும் ...

வாசனையைச்சித்தத்தில்வையாததுமுத்தி ...
யாசிலிதற்கர்த்தமிதேயாம். ... (௩)

உட்புறம்பாலியானெனதென் றுற்றுவருமவற்றை ...
நட்புற்றுநாடோறுநைந்துநைந்தே - யெய்ப்புற்றுப் ...
போகாமலெப்பொழுதும் பூரணமாமன்னமுத்தி ...
யாகாதோவர்த்தமிதேயாம். ... ... (௪)

உள்ளசுகமீதென்றுணரவறியாதமனக் ... ...
கள்ளவினுலிவ்விடயக்காங்கிசையு - மெள்ளமெள்ள ...
வந்ததேயிவ்விடயவாஞ்சையிறக்கமுத்தி... ...
சிந்தையிதேயர்த்தமெனச்சேர்... ... (௫)

முத்திநிச்சய

முற்றிற்று.

---

சற்குருநாதன் றிருவடிவாழ்க.

# தெய்வநிச்சயம்.

(நேரிசைவெண்பா.)

---

சுட்டுமிடத்துண்டெனலாய்ச்சுட்டற்குவில்லாத ...
துட்டமனச்சஞ்சலத்திற்றேயாம - லெட்டரிதா ...
யெவ்வுருவுமெங்கு மிரும்பொருளாய் நின்றதெதோ......
வவ்வறிவேதெய்வமெனலாம். ... ... (௧)



காண்பனவாலுண்டெனலாய்க்காண்பதற்குவில்லாத ;...
வீண்பயிலுமாயைவிதிரித்தமதாய்-மாண்புடைய ...
முப்பாழ்கடந்தமுதற்பாழாமூலமெதோ .. ...
வப்பொருளே தெய்வமெனலாம் ... (௨)

தெய்வநிச்சயமுற்றிற்று.

சற்குருநாதன்றிருவடிவாழ்க.

---

# மனத்திற் கறிவுறுத்தல்.

(எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்)

---

நன்றுகளுந்தீதுகளுநமதிடத்திலில்லை... ...
நமதிடத்திலுண்டானநினைவதனுலுண்டு ...
நன்றுகளுந்தீதுகளுநினைவிறந்தாலில்லை ...
நமதுமயம்வெறும்பாழாநாடியதுவாவாய்... ...
நன்றுகளுந்தீதுகளுநினைவுமயமாகு... ...
நமதுமயநினைவாகுநாடியுணருங்கா... ...
னன்றுகளுந்தீதுகளுமின்றிநிறைகின்ற... ...
நமதுமயமெல்லாமாநாடியதுவாவாய்... ... (௧)

(கலிவிருத்தம்.)

அம்மாவிகமிதுவேபரமிதுவென்றனவரதந் ... ...
தம்மான்மிகநொந்தேயுமிக்குத்திச்சலியாதே... ...
கைம்மாறறுமுடலைத்தினங்காக்கக்கரையாதே...
சும்மாவிருசுகமேவருந்தொடர்ந்தாயிலைமனனே...

(நேரிசைவெண்பா.)

வேண்டாதேகண்டவெல்லாம்வேண்டினுற்பந்தமுனைத்... *
தீண்டாதோசென்மவினைதீர்ந்திடுமோ- மாண்டாலும்... *
தீராவியாதியுனைச்சிக்கியாளாக்கிவிடும்... ... *
பாராய்தவிரும்படி. ... ... ...(௩)

அச்செல்லாம்பொய்யென்றறிந்தாலதிலொருவன் ... *
றுச்சமறநன்மையறச்சொன்னலு - மச்சொல்லும் ... *
பொய்யோவதுமெய்யோபோதமில்லாநெஞ்சமே........ *
யையோவிதினுவாரார்... ... (௪)

அத்தியந்தாபாவமாகுமிழிகோசமைந்தும்... *
புத்தியினுனித்தியமாய்ப்பொற்புறல்போற் - புத்தியினு. *
வில்லாதாய்நீங்காதோவேழைமனமேயிதனிற் ... *
புல்லாதிருந்தவனேபொய். ... ...

மனத்திற்கறிவுறுத்தல்முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

# பொதுவாகக்கூறியது.

(எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.)

---

விண்ணுதிபூதமெலாஞ்சிவமேயாகு... *
மெய்யுருவும்பொய்யுருவுஞ்சிவமேயாகுங்... ... *
கண்ணனவேதமெலாஞ்சிவமேயாகுங்... *



மெண்ணிறந்தபேதமெலாஞ்சிவமேயாகு... ... *
மிப்படியேதினந்தோறுங்காண்பானுகிற்... *
பெண்ணுணுமலியாகும்பேதமின்றிப்... ... *
பிரமமயமாதறிண்ணம்பேதமினறே... ... (௧)

அகவிருத்திதனிலுண்டாஞ்சீவனுக்கே...... ... *
யதிட்டானஞானவடிவல்லவென்று.... ... *
லகவிருத்திதானிதமாவாகும்போதே... ... *
யவனெனதென்றியாதொன்றையறியவொண்ணு... *
வகவிருத்திசெனித்தவிடமகண்டமாகு... ... *
மல்லவெனிலவைசெனித்தவடிவமாகா ... *
வகவிருத்திசெனித்தவடிவாதலாலே... ...
யதிட்டானந்தனிலடங்குமையமின்றே. ... (௨)

(நேரிசை வெண்பா.) *

சிறும்புயங்கஞ்சினமிகுத்ததென்றறிந்து... ... *
பாறுறுமெய்யோர்பயமான - வாறதுபோ... ... *
லாங்காரவீணருகேயறிவுடையோர்... ... (௩)
தாங்காமற்செல்லார்தகும்...... ...... *

எண்ணிப்பலபொருளையீட்டினுனுலு... ... *
மண்ணிற்பெரியோனுய்வாழ்ந்தாலும் - விண்ணதிலே... *
மூடாவிழியுடையோரானுலுமுத்தியினைக்... ... (௪)
கூடார்கட்காளாக்குறி. ... *

சாதிக்கிழுக்கென்றுந்தன்குலத்துக்கீனமென்றும் ... *

யில்லாதசாதிக்கிருப்பிடமீதென்றுரைத்தா... ... *
னல்லாரதைநாடுவார்... ... ... (௫)

தன்மயமாஞ்சத்திதானினைக்காமவுரு... ... *
மின்மயம்போற்றோன்றிவிளிந்திடுமே – யென்மயமே ... *
யாமேயவையெல்லாமானால்யானும்மெனதும்...... *
போமேசிவமயமாய்ப்போம்... ... ... (௬)

ஆதிநடுவந்தத்தழியாதிருந்ததெந்தச்... ... *
சோதியன்றோவைந்தாந்தொழில்செய்யுந் – தீதிலவை *
யேராரெனதுமயமென்றறிந்தாலெத்தொழிலு... ... *
மாரார்சிவமயமேயாம்... .. ... (௭)

தீதுநலம்பாவமறஞ்சேதனமாஞ்சின்மயமே... .. *
சேதமறநின்றுதினம்புரியு – மாதலினு... ... *
லிவ்வுருவமென்மயமேயென்றுணரிலிந்நான்கு... ... *
மவ்வுருவமாஞ்சிவமேயாம்...... .. ... (௮)

கும்பிடவோமேலில்லைக்கும்பிடவோகீழில்லைக்... ... *
கும்பிட்டுநீங்கக்குறையில்லை – கும்பிடும்பே... ... *
ராரோவதியேன்யானாகாவோகோகோ... ... *
சீரேதுமில்லைச்சிவம்... .. ... (௯)

செய்யுந்தவமுந்திரயோகநிட்டைகளுஞ்... ... *
செய்யுமுபதேசந்திரபூசை – யையமறச்... .. *
சொல்வேன்சுதந்தரனையன்றியுலகென்ப...... ... *
இல்லென்றுணருமிதே.......... ......... (௰)



தெய்வவடிவறிந்தத்தேவதையைப்பூசைபண்ணித் ... *
தெய்வவடிவாந்திறங்கேளீ – ரையமினால்... ... *
சற்குருவாற்றானுணர்தல்சந்ததமுஞ்சிந்தித்த ......... *
னிற்குமதுவானநிலை... ... ... (௰௧)

ஐஞ்ஞூற்றுவீசரடியிணையைச்சேர்ந்தவுனக் ... ...
கெஞ்ஞான்றுநெஞ்சேயிடருண்டோ – பைஞ்ஞாகந்... *
தாங்கும்புவிவிளங்கச்சஞ்சரிக்கும்பானுகண்ட... *
னாங்கிமம்போகாதோசொல்... ...... ... (௰௨)

ஈயக்கதிராமிலக்கணமுமின்குறளு... ... *
மாயப்பொருளாவறைந்தாலு – நோயகலா.... ... *
தன்னைமறந்தவொருதுரியபூமியிலே... ... *
மன்னியிருக்கமதி... ... .. (௰௩)

பொதுவாகக்கூறியது முற்றிற்று.

---

சிவமயம்.

# புத்திக்கறிவுறுத்தற் கண்ணி.

(வெண்செந்துறை.)

---

பஞ்சவிதவிடயம்பாங்காப்பரம்புசிக்க.......... (௧) *
நெஞ்சேநீநானெனவேநிச்சயிப்பதென்னமதி...

அஞ்சுவிதவிடயமாருமறிவாயிருக்கப்... ... *
பஞ்சவிதமாகப்பார்த்துழல்வதென்னமதி..... ... (௨)
காண்பவனைக்காணுது காண்பவையைக்கண்டுழன்று *
வீண்காலமாகவிழக்கிறைப்பதென்னமதி... ...(௩)
ஈசன்வடிவாமேயெட்டுருவுமென்றுணர்ந்து..: *
பாசந்தவிர்ந்தொழியப்பாராதென்னமதி ... (௪)
காரியரூபங்களெல்லாங்காரணமாக்காணும ... ... *
ஞரிமனையென்னதெனநாடவந்ததென்னமதி... .. (௫)
சும்மாதனியிருக்குந்தூய்தார்துரியமதி... ... *
லெம்மாதினமிருப்பதாகாதென்னமதி... .... (௬)
எவ்வுருவுநாடினிராகவெருளியறத்... *
தவ்வலறச்சிவமாய்ச்சார்ந்தறியாதென்னமதி... (௭)
நானெனவுநீயெனவுநாடலுடலைக்குறித்தே ...... *
ஞானமயமொன்றெனவேநாடாதென்னமதி... ... (௮)
பொய்யைப்பொருளாகப்புன்மதியாற்கண்டதுபோன். *
மெய்யையுணர்ந்தத்துவிதம்வேண்டாதென்னமதி... (௯)
எப்பொழுதுந்தன்னையன்றியாதுவந்ததியாதொழிந்த *
தப்படியேயெண்ணியமையாதென்னமதி... ...(௰)
மாயாவிருளிரவில்வந்தகனுவிட்டொழிந்து... ... *
நீயாநிலைதனிலேநில்லாதென்னமதி.. ... (௰௧)
முன்னடங்கும்வாதனைகண்முற்றுந்தவிராமே .... *
யின்னமினந்தாங்கியிரங்குவதுமென்னமதி. ...(௰௨)
ஆகாதவாதனையாலல்லறினம்பட்டுழன்று ... *
மோகோவினந்தவிராதுழலுமதியென்னமதி ...(௰௩)



பேதமுறுபுந்திதனைப்பேதித்தகற்றும ... *
லாகமயல்கொண்டதுவாயாகுமதியென்னமதி ...(௰௪)
பொல்லாக்கயவர்புகும்வழியிற்செல்லாம ... *
னல்லோரடங்குமிடநாடாதென்னமதி ...(௰௫)
கற்பிதத்தைமெய்யாகக்கண்டுகண்டுதுன்பமுறு... *
தற்புதமாஞ்சின்மயநீயாகாதென்னமதி ... ...(௰௬)
சுட்டற்றவெட்டவெளிதோயாமனுமவுருச்... ... *
சுட்டியனுதினமுந்துன்பமுறலென்னமதி. ... ...(௰௭)
நிற்கநிறுத்தநிலையாதநீசமனத் ... *
அற்சங்கநீங்கிச்சுகமாகாதென்னமதி... ... (௰௮)
தட்டத்தடுக்கத்தடைபடாநீசமனத்... ... *
திட்டப்பிசாசோடுந்தோயுமதியென்னமதி... (௰௯)
கட்டப்பிடிக்கக்கடந்தோடுமீனமனச்... ... *
சுட்டகற்றித்தற்பதத்தைத்தோயாதென்னமதி... (௨௰)
நிர்க்குணனேமுக்கணனுய்நின்றுசகங்காட்டியட்டு ... *
நிர்க்குணனுய்நிற்பதெனநில்லாதென்னமதி... (௨௧)
சந்ததமுஞ்சின்மயமாய்த்தானிருந்தாற்றெருந்தவினை *
வந்துறுமோவென்றுமதியாதென்னமதி........ (௨௨)
கண்டவெல்லாம்பொய்யாகக்கண்டிருந்துங் காண்பவை *
யை - யுண்டெனவேபற்றியுழலுமதியென்னமதி... (௨௩)

புத்திக்கறிவுறுத்தற்கண்ணி முற்றிற்று.

---

சிவமயம்.

# நெஞ்சோடிரங்கல்.

(நேரிசைவெண்பா.)

—

மேலாந்துரியநிலைவிட்டுவிடயத்துழன்று ...
நாலாவிதவரந்தைநண்ணிநண்ணி - மாலாகி... ...
நின்றமனத்தோடிரங்குநீதிதனையிதயந்...... ...
துன்றியுறையைங்கரனேசொல்... ... (க)

மஞ்சுருமஞ்சன்மகன்றனுவினூறுற்ற ... ..
நஞ்சாருங்கண்டத்தநக்கனிட - மெஞ்சாது ... *
புல்லியிருந்தருளும்பூரணிநெஞ்சோடிரங்கல்... ...
சொல்லுமென்றனுவிருந்துசொல்... ... (உ)

பாயிரமுற்றிற்று.

—

(வெண்செந்துறை.)

சீரார்கழனித்திருநெல்லையம்மைபதஞ் ...
சாராமலென்னேசனித்திறந்தாய்நெஞ்சகமே ... (க)

இதுவேசிவமென்றுமீதுமனமென்று.. ...
மதனால்விளங்கிலுனக்கறிவெங்கேநெஞ்சகமே... (உ)

பன்னாளுங்காண்பவற்றைப்பற்றிநொந்துநைந்திருப்ப. *
தென்னாடோலைத்தறிவாயென்றிருப்பாய்...



என்னாளுமின்பநிலையீதென்றறிந்திருந்தும் ...
பன்னாளுந்துன்பப்படலாமோநெஞ்சகமே...... ... (ச)

அச்சந்தவிர்ந்த நிலையாமதனைச்சேராமற் ... ...
றுச்சவினைபுரியத்துணிந்தனையேநெஞ்சகமே ... ...(ரு)

தன்மயமீதென்றுணர்ந்துதானதுவாய் நில்லாம ...
லின்னமிடரடைவதென்னமதிநெஞ்சகமே. ... ... (சு)

ஈதெனதியானிவனென் றெண்ணியெண்ணியே ...
ழையர்போற், நீதடைந்தாற்சீதளமுஞ்சேருமதோ ... (எ)
நெஞ்சகமே. ... ... ... ...

பாசவடிவதனைப்பற்றிப்பயமடைந்தான் ...
மாசுதவிர்ந்தவெளிமன்னலுண்டோ நெஞ்சகமே ... (அ)

வாசனைகளியாதுமிலாமன்னுதுரியந்தனிலே ...
தேசுபெறநிற்கத்திகைப்பேனோநெஞ்சகமே ... (கூ)

சங்கற்பசாலந்தவிர்ந்தசமபாவனையிற் ...
றங்கிப்பரமசுகஞ்சார்வதென்றோநெஞ்சகமே ... (ய)

பாராமற்பார்க்கும்பரமவிழிபெற்றிருந்தா ... (யக)
ஆரேதுபேரேதுலகேதுநெஞ்சகமே ... ...

இந்தப்பெரும்பிரமாகாரநிலையெய்தாமற்... ...
றெந்தப்பிராந்திநிதந்தோய்ந்தனையேநெஞ்சகமே... (யஉ)

மோகாதிகாரியங்கண்முற்றுமிறந்தபதத் ...
தேகோகோசோராதுழல்கின்றாய்நெஞ்சகமே ... (யங)

ஐம்பொறியுமைம்புலனுமாறியடங்குமிட ... (யச)
நம்பிநம்பியீதுடையநாளென்றோநெஞ்சகமே

பற்றாமற்பற்றும்பரமசுகநிட்டைதனைப் ... *
பெற்றிருந்தாலென்னகுறைபேசாய்நீநெஞ்சகமே... (௰௫)
ஆன்மவுருவகண்டமந்தவுருவாகாமற்... ... *
றானொருவன்போலாய்ச்சலித்தனையேநெஞ்சகமே... (௰௬)
சச்சிதானந்தத்தனிவீட்டின்வாழாம... ... *
னச்சுருவாங்காட்சிதனைநாடினைந்தாய்நெஞ்சகமே...(௰௭)
சான்றாந்துரியமதைச்சாராமனாடோறுந்... ... *
தோன்றுவிடயமதைச்சுட்டினையேநெஞ்சகமே... (௰௮)
பாவனைகளியாதுமிலாப்பானநிலையெய்தாமற் ... *
றீவினையைச்சேர்வதென்னசிந்தனையோநெஞ்சகமே. (௰௯)
தூங்காமற்றூங்குஞ்சுகநிலையிற்செல்லாது ... *
நீங்காமற்றுச்சவினைநீபுரிந்தாய்நெஞ்சகமே ... (௨௰)
காண்பவற்றைமுப்பொழுதுங்காட்சியறத்தோற்றுவிக்கு
மாண்புடையசித்தின்மடிவதென்றோநெஞ்சகமே ... (௨௧)
நித்தரங்கமுந்நீர்போனின்றுவிளக்கறிவின்... ... *
வைத்தபடிரமித்துவாழ்வதென்றோநெஞ்சகமே ... (௨௨)
திரிபுடிக்குஞ்சாட்சியெனுஞ்சின்மயமாய்நில்லாமற். *
குறிபிடித்துநாடோறுங்குலைகுலைந்தாய்நெஞ்சகமே (௨௩)
அவத்தாத்திரயவதிட்டானமாயிருந்து ... ... ... *
பவத்தையழிக்காமற்பாழ்பட்டாய்நெஞ்சகமே ... (௨௪)
முக்குணமுங்கெட்டமுதற்பாழைச்சாராம... ... *
லக்குணத்தோடொன்றியலைந்தனையேநெஞ்சகமே...(௨௫)
கோசமைந்துந்தோன்றாக்குருதுரியஞ்சேராமற் ... *
பாசமெனும்வலைக்குட்பட்டுழன்றாய்நெஞ்சகமே (௨௬)



எல்லாமிறந்தநிலையீதென்றுகண்டிருந்து...
நில்லாமலந்தநிலைநீங்கினையேநெஞ்சகமே... ... (௨௭)
ஆறாறின்மேலாமறிவுமயமாகாம... ... ... *
லோராறினோடியுழல்வதென்னோநெஞ்சகமே ... (௨௮)
துன்பத்துவிதந்தொலைந்தசுகநிட்டையிலே... ... *
யின்பத்துருவாயிருப்பதென்றோநெஞ்சகமே... (௨௯)
சீவேசுரசெகத்தைச்சித்தொன்றாத்தோற்றுவிக்கப் ... *
பாவனையாற்பேதித்துப்பற்றுகின்றாய்நெஞ்சகமே... (௩௰)
ஆமையுறுப்பையடக்குதல்போற்காண்பவையாந் ... *
தீமைதனிற்புலனைச்சேர்க்காதேநெஞ்சகமே ... (௩௧)
சத்தோடசத்துஞ்சதசத்துமாகாத ... ... *
சித்தம்பலவாஞ்செகம்பொருளோநெஞ்சகமே ... (௩௨)
சித்துருவாற்றோன்றுஞ்செகந்தனையீதின்னதென்று *
நித்தமவதானஞ்செய்நீயொழியாய்நெஞ்சகமே... (௩௩)
எத்தனையோகோடியியல்புரைத்துங்கேளாம .... *
லத்தனையும்பாழாவயர்த்தனையேநெஞ்சகமே... (௩௪)
எட்டுருவுமீசன்மயமென்றறிந்துமந்தமதி... ... *
விட்டவனைப்பற்றிவிடுதலுற்றாய்நெஞ்சகமே ... (௩௫)
நிவாததலதீபநிற்பதினில்லாமற்... ... *
குவாலப்பிணிக்குரம்பைகூடினைந்தாய்நெஞ்சகமே...(௩௬)
சித்திரத்திலேவரைந்ததீபம்போனில்லாமற் ... *
கத்தித்தலைவெடிக்கக்கற்றனையேநெஞ்சகமே ... (௩௭)
அரவின்களமறுக்கிலந்தலையின்கேட்டிற்... ... *
பரமவுருநீயடையிற்பாறுமைந்துநெஞ்சகமே... (௩௮)

ர்
தத்தாயபிண்டமதிற்சாந்தசலம்போற்றுரிய... *
வத்திலடங்கியதாய்வாழ்வதென்றோநெஞ்சகமே... (௩௯)
எண்ணெயிருப்பற்றவெழிற்றீபம்போலவுநீ ... *
யெண்ணரியவிச்சைதவிர்ந்தென்றழிவாய்நெஞ்சகமே(௪௰)
இல்லாதிறக்குமிழ்குரம்பைவாசனையைப்... ... *
புல்லாதமெய்யுணர்வைப்புல்லலென்றோநெஞ்சகமே (௪௧)
சும்மாவிருந்துசுகந்தோயாமற்றன்னினைவா... *
லம்மாசுகமடைந்தோராருரைப்பாய்நெஞ்சகமே... (௪௨)
போராட்டப்பட்டபுரமெடுத்தவிவ்வரையில் ... ....*
சேராட்டிலென்னசுகஞ்சேர்ந்தனைநீநெஞ்சகமே. ... (௪௩)
இல்லாளுமில்லத்திருநிதியுமீன்றமக ... ... *
வெல்லாமறந்திருப்பதென்றுனையாய்நெஞ்சகமே ... (௪௩)
பந்தநமக்குண்டதனைப்பாற்றமுத்திவேண்டுமெனு... *
மிந்தநினைவிரண்டுமென்றயர்ப்பாய்நெஞ்சகமே ... (௪௫)
மறப்பதுவேநல்லதெனமாணவர்தாஞ்சொல்ல ... *
வறத்தினமுநீநினைத்தேயல்லலுற்றாய்நெஞ்சகமே ... (௪௬)
எல்லாமறந்துவிட்டாலிவ்வுடலநீங்குமெனி ... *
லில்லமிலாப்பித்தனிருப்பதுபோனெஞ்சகமே ... (௪௭)
முற்றுமலமாயிருக்குமுடமதாமிவ்வுடலிற்........... *
சற்றும்விரத்தியுண்டாய்ச்சார்கிலையேநெஞ்சகமே... (௪௮)
செய்ததுவேசெய்யத்தினந்துணிந்துசெல்வதுவே... *
யுய்யும்வழியென்றொருப்பட்டாய்நெஞ்சகமே ... (௪௯)
பத்துத்திசையும்பதினொன்குலகுமற்றுஞ்... ... *
சித்தசித்துஞ்சிற்சடமுஞ்சிவரூபநெஞ்சகமே... (௫௰)



*
பண்ணவிதன்பாதநிழற்பற்றியதுவாயிருக்கி...
லெண்ணரியவிச்சையிரிந்தோடுநெஞ்சகமே... ...... (௫௧)
என்னிதயத்துள்ளேயிருந்ததிருநெல்லைபதத்... ... *
தன்னினைவுநீயுமொழிவதென்றோநெஞ்சகமே... (௫௨)
அண்டமெலாந்தோற்றியழிந்தபதமாயிருந்தாற்... *
பிண்டவுபாதியன்றேபோராதோநெஞ்சகமே. ... (௫௩)
எல்லாவுலகுமிறந்துமிறவாதபதஞ்.. .... *
செல்லாதுகாண்பவற்றிற்சிக்கினையேநெஞ்சகமே... (௫௪)
தோன்றுசிசுவுணர்வுதுகளற்றுக்காணுதலின்... *
மான்றவுருவந்தோன்ற வருவதென்றோநெஞ்சகமே (௫௫)
தோற்றுருவையீதெனவேசுட்டுமயலாமறிவை... *
மாற்றியகண்டசுகவாழ்வடைவாய்நெஞ்சகமே... (௫௬)
விட்டேனுலகமெனும்வீணனவாசனையுங் ... *
கெட்டிலங்குமன்னையடிகிட்டிலையோநெஞ்சகமே (௫௭)
எத்திக்குந்தானுயிறந்துபிறவாதடைந்தாற்... *
செத்துப்பிறத்தலன்றேதீராதோநெஞ்சகமே... (௫௮)
ஒன்றேடுந்தாக்கற்றுறுதுரியாதீதமதிற்... ... *
சென்றுசிவமாகவெந்நாட்செல்லுமதோநெஞ்சகமே (௫௯)
மெய்யுருவைநாளும்விரும்பாதிருந்தவிந்தப்... *
பொய்யுருவாற்பட்டதுயர்போதாதோநெஞ்சகமே... (௬௰)
பன்னுளுங்காண்பவற்றைப்பற்றிப்படுந்துயர... ... *
மென்னுலினிச்சகிக்கவேலாதேநெஞ்சகமே... ... (௬௧
என்னுட்சிவவடிவையான்மறந்ததன்றுமுத... ... *
[illegible]
[illegible]

இற்றைவரைக்காண்பவையையெய்தியெய்தியென்ன *
சுகம் - பெற்றனைசொன்னாலறியாய்பேதமலநெஞ்ச (சுங)
எல்லாமிறந்ததிருநெல்லையிணையடியைப் ... *
புல்லவகமிதமும்போகாவோநெஞ்சகமே ... (சுச)
வித்தைச்செருக்கடைந்துவீணாட்கழிக்குமருட் ... *
புத்திக்குருடர்நெறிபோகாதேநெஞ்சகமே... ...(சுரு)
நிழனெருப்பாய்க்கண்டநினைவுதவிராதே... ... *
விழலுக்குநீரிறைக்கும்வேலையுற்றாய்நெஞ்சகமே ... (சுசு)
நாரியிலம்பூமிதனநாசமுறுமென்றவெலாம்... ... *
வாரியினிற்பெய்தமழையானநெஞ்சகமே... ...(சுஎ)
ஓயாதுழலுமதியோய்வதிலையுன்றனக்கு... ... *
வாயாற்பிதற்றமதிவந்ததென்னேநெஞ்சகமே ... (சுஅ)
பொல்லாதவிக்காயம்புல்லுமதிவாசனைக... ... *
ளெல்லாமிறந்தவெனவென்றிருப்பாய்நெஞ்சகமே (சுகூ)
காரார்குழன்மடவார்கற்பித்தவேவல்செய்து... *
ஆராக்குழிதூர்க்கத்தோன்றினையேநெஞ்சகமே ... (எ0)
விண்ணுதிகண்டவிசுவமிறவாதிறந்த... ... *
கண்ணுந்துரியமதைக்கையிகழ்ந்தாய்நெஞ்சகமே ... (எக)
ஆரணங்களீதென்றறிவரியதென்கழனிப்... *
பூரணியைநீமறந்துபுண்பட்டாய்நெஞ்சகமே .....(எஉ)
அல்லும்பகலுமகமிதந்தீரென்றதனாற்.. ... *
கல்லுங்கரையாதோகடைப்பட்டநெஞ்சகமே... (எங)
இல்லந்துறந்துசுகத்துறவையெய்தாம... ... ... *
வல்லற்படுமியல்பையார்விதித்தார்...



பற்றுமற்பற்றும்பரமசுகநிட்டைபெற்றாற் ... ...
பற்றுருவிலென்னதெனும்பார்வையுண்டோநெஞ்சகமே
தோன்றுமற்றேன்றுந்துரியநிலங்கண்டிருந்தா ...
லான்றுதுபற்றிவிடுமோர்வுண்டேநெஞ்சகமே... (எ

முற்றிற்று.

ஆகப்பாயிரமுள்பட - எஅ.

---

# தெய்வமேயென் னுங்கண்ணி.

---

அண்டமும்பிண்டமுமானதுங்காண்கிலேன் றெய்வமே
யிந்த - வண்டமும்பிண்டமும் வேறென்றறிந்திலேன் றெ
வமே... ... ... (
ஆதியுமந்தமுமில்லா வரும்பொருடெய்வமே - யிந்த
கோதாமுடம்பாய்க்குறித்துவிளங்குதேதெய்வமே... (
இன்பவுருவாயிருந்தபரஞ்சுடர்தெய்வமே - யிந்தத் -
ன்பசுகவினைத்தொந்தமடைந்ததேதெய்வமே... (ந
ஈகையுமேற்றலுமில்லாவிரும்பொருடெய்வமே -யிந்த-
கையுமேற்றலுமாகியிருந்ததேதெய்வமே ... (
உண்மையுமின்மையுமின்றியிருந்ததேதெய்வமே -யிந்த
வுண்மையுமின்மையுமாகிவிளங்குதேதெய்வமே ... (
ஊனமுறும்பந்தவோதமொழிந்ததேதெய்வமே - யிந்த
ஊனமுறும்பந்தவோதமடைந்ததேதெய்வமே ... (சு

எப்பொருளாவதுமெய்ப்பொருளென்பதுதெய்வமே-யிந்
தத் -தப்பறுநல்லோர்நிலையிதுசத்தியந்தெய்வமே...... (௭)
ஏதோதறிகள்ளனென்பதுபோலொன்றுதெய்வமே - யிந்
தத்-தீதேயிலாதசிவத்தினிற்சேரன்றுதேதெய்வமே... (௮)
ஐயவுருவேயகமென்றுதோன்றலாற்றெய்வமே - யிந்தப்
பொய்யாமலகையாம்புன்பவந்தோன்றுதேதெய்வமே. (௯)
ஒன்றேபடும்பாடுரைப்பேன்சிறிதறிற்றெய்வமே -யிந்தப்
பொன்றுமுடம்பும்பொருளாய்முடிந்ததேதெய்வமே...(௰)
ஓவாதஞானவமுதமுவட்டுதேதெய்வமே - யிந்த - வோ
வும்விடயவிடஞ்சுகமொத்ததேதெய்வமே... (௰௧)
ஔவியமில்லாவறிவுமறைந்ததேதெய்வமே - யிந்த - ஔ
வியருபவகிலமேதோன்றுதேதெய்வமே... ...(௰௨)
அக்கமும்பக்கமுமானதைக்காண்கிலேன்றெய்வமே- யி
ந்த - வக்கமும்பக்கமுமெண்ணியழிந்தேனென்றெய்வமே.()
கண்டவுருவங்கள்காண்பதாக்காண்கிலேன்றெய்வமே -
யிதைப் - பண்டுபறித்திட்டபாவியரார்கொலோதெய்வமே
காலங்கண்மூன்றுங்கடந்ததைக்காண்கிலேன்றெய்வமே
யிந்த-ஞாலத்தின்பேதங்கணன்குகத்தோற்றுதேதெய்வமே
கின்னமுறும்பலவீணரைக்கிட்டினேன்றெய்வமே- யிந்த
நன்னலம்பெற்றோரைநண்ணவுநாணினேன்றெய்வமே(௰௬)
கிழோருரைத்தவுரைகளைக்கேட்கிறேன்றெய்வமே -யிந்த
ப்-பாழ்வாழ்விலென்னபயனெனத்தேர்கிலேன்றெய்வமே()
குட்டியமானதுரம்பையைநாடொறுந்தெய்வமே- மிகக்-
கட்டியேகாத்திருந்தென்பயன்கண்டனன்றெய்வமே(௰௮)



கூடாதென்னலிந்தக்கூட்டிலிருக்கவுந்தெய்வமே - யிந்
தப் - பாடுபடுவதுபார்த்திலையோபரதெய்வமே... (௰௯)
கெம்பீரமன்றிக்கிலேசமடைந்தனன்றெய்வமே - யிந்த
ப் - பம்புபவக்கடலுண்டலென்றேபரதெய்வமே. (௨௰)

முற்றிற்று.

---

## கிளிப்பத்து.

---

(வெண்செந்துறை.)

கண்படையுஞ்சாக்கிரமுங்காணத்துரியநிலைப்... *
பண்படைவதென்றேபகராய்நீயஞ்சுகமே... ... (௧)
உள்ளும்புறம்புமனமுற்றிடுஞ்சங்கற்பசகர்... ... *
தள்ளிச்சுகநிலையிற்சார்வதென்றேவஞ்சுகமே... (௨)
உன்னலொழிதலினுலுண்டரந்தையின்பமிது... ... *
பன்னுசமநிலையிற்பாறலென்றேவஞ்சுகமே ... (௩)
உள்ளநினைப்புமறப்புற்றிடினேர்தன்வடிவை... ...*
யுள்ளபடியுணரவொண்ணுமதோவஞ்சுகமே... ... (௪)
இத்தரையிற்றேகமெடுத்தெய்து மனச்செய்கைவிட்டுச்*
சித்தசமமாம்வாழ்வுசேர்வதென்றேவஞ்சுகமே ... (௫)
இட்டமொடுநாமவுருவெய்திமனஞ்சுட்டியுறுஞ் ... *
சுட்டறிவுநீங்குநிலைதோய்வதென்றேவஞ்சுகமே... (௬)
தம்மாலறிவறியாமையிரண்டுந்தள்ளிவிட்டுச் ... *
சும்மாவிருக்குநிலைதோய்வதென்றேவஞ்சுகமே (௭)

இத்தேகம்பற்றியிருக்குமொருதேகியின்றி... ... *
யெத்தேகமும்யானுமிருட்பதென்றேவஞ்சுகமே ... (அ)
மூலப்பகுதிமுடிந்துமுடியாதுபெறுஞ்... ... *
சீலப்பரமசுகஞ்சேர்வதென்றேவஞ்சுகமே... ...(கூ)
சித்தமிறந்தாற்சிவமிறக்குந்தேகியுள... ... *
தத்தன்மையின்றியவனுவதென்றேவஞ்சுகமே ... (ய)
அத்திபாதிப்பிரியவாதிவெளியாயிருந்தாற் ...... *
சுத்தமிலாச்சீவபரத்தொய்தமெங்கேயஞ்சுகமே ... (ய)

கிளிப்பத்துமுற்றிற்று.

---

# சந்தவிருத்தம்.

---

நன்னனு - நன்னனு - நான னன்னன... ... *
நானன - நானன - நாநானே... ... ... *
சொல்லலாஞ் - சொல்லலாந் - தார - தலங்களைத் ... *
அற்றிவிட் - டோமென - வாயாலே... ... (க)
நன்னனு - நன்னனு - நன்ன - னநன்ன... ... *
நானன - நானன - நானுனே... ... ... *
சொல்லலாஞ் - சொல்லலா - மந்தக் - கரணத்தைச் ... *
சுட்டுவிட் - டோமென - வாயாலே... ... (உ)

சுவாநுபவத்திருவாக்கு
முற்றிற்றுமுற்றும்.